இன்றைய அதிகாலை சிந்தனை :

**சிவோஹம் சிவார்ப்பணம்**
**என்பெருமான் என் உள்ளமர்ந்து இவ்வரிய செயலை நிறைவேற்றித் தர வேண்டி இவ்வறிய செயலை தொடங்கிப் ப்ரார்த்தனை செய்கிறேன்.**

திருபொன்னூசல் அனுதினமும் சிவாலயங்களில் அர்த்த ஜாமத்திற்குப் பாடப்பட்டு வருவது அனைவரும் அறிந்தே. அனுதினமும் முடிந்த வரையில் சமீப காலமாக அரத்த ஜாமத்திற்கு சென்று வருகிறேன். முழுப்பதிகம் பாடுவது உத்தமம். ஆனால் சில பாடல்களே பாடுகின்றனர். அதிலும் 1 அல்லது 2 பாடல்களைப் பாடுகின்றனர். பாடும் அடியார் வரவில்லையானால் எந்தப் பாடல் பாடவேண்டும் என்பதில் குழப்பம் உள்ளதை கவனித்தேன். இதற்கான ஒரு சிறு நுணுக்கத்தை சற்குருநாதன் மணிவாசகர் அவர்கள் அந்தப் பாடலிலேயே வைத்துள்ளார் என்பதை இன்று காலை உணர்த்தியதை இங்குப் பதிகின்றேன்.
திருப்பொன்னூசல் பாடல் 9 அதில் 7 இடங்களில் “பாடி” என்ற சொல் வருகிறது.

பாடல்01: **அருள் தாளிணைப்பாடி** - அருளாகிய திருவையை பாடி

பாடல்02: **இடைமருது பாடி** - திருவிடைமருதூரைப் பாடி

பாடல்03: **வியன்மாளிகைப்பாடி**-மாடங்களுடைய கோயிலைப்பாடி

பாடல்04: **தூய புகழ்பாடி** - தூய்மையானவனின் புகழ் பாடி

பாடல்05: ----------------------------------------

பாடல்06: **காதாடு குண்டலங்கள் பாடி** - காதில் ஆடுகின்ற......

பாடல்07: **ஆட்கொண்டான்**எழில்பாடிப்-இறைவனதுஅழகினைப்பாடி

பாடல்08: **வாயார நாம் பாடி** - வாய் நிரம்ப் பாடி

பாடல்09: ----------------------------------------

வார நாட்கள் திங்கட்கிழமையிலிருந்து தொடங்கி ஞாயிற்றுக்கிழமை வரையில் அதாவது சந்திர கலையானது சூர்யகலையுடன் சேர சுழுமுனை ஆகிய அக்னியே இறைவன்.இதுவே **சிவ-ஜீவ-ஐக்கியமாகிய ஜீவன் முக்தி** ஆகும். இதை உணர்த்துவதே இந்த **பொன்னூசல்.**

ஊசல் என்பது முன்னும் பின்னும் ஆடுவது என்பது மூச்சு உட்செல்வது மற்றும் வெளிவருவது . அதாவது சந்த்ர கலையில் ஆரம்பித்து சூர்ய கலையில் ஒன்று சேர்த்தால் அக்னிகலையாகிய **அருட்பெரும் ஜோதியாகிய ஈசனைக்** கண்டு கொள்ளலாம். இதுவே லிங்கந்தில் உள்ள சூர்ய-சந்திரர் ஆவர். இந்த இருவருடன் தொடர்புடைய கிரகங்கள் 9. இதில் 2 சாயா கிரகங்களான ராகு,கேதுவிற்கு கால் இல்லை. எனவே கீழ்வரும் முறையில் பாடலாம்.

**திங்கள்கிழமை** - பாடல் 01 - சீரார் பவளங்கால்..

**செவ்வாய்கிழமை** - பாடல் 02 - மூன்றங் கிலங்கு..

**புதன்கிழமை** - பாடல் 03 - முன்னீரும் ஆதியும்

**வியாழக்கிழமை** - பாடல் 04 & 5 - நஞ்சமர் கண்டத்தன் & ஆணோ அலியோ

**வெள்ளிக்கிழமை** - பாடல் 06 - மாதாடு பாகத்தன்

**சனிக்கிழமை** - பாடல் 07 - உன்னர்க் கரியதிரு

**ஞாயிறுக்கிழமை** - **பாடல்** 08 & 09 கோல வரைக்குடுமி & தெங்குலவு

**இச்சிந்தனையை சிவகாமி அம்பாள் சமேத சித்சபேசன் திருவடிகளில் சமர்பிக்கின்றேன்,**